## 56

# தை முதல் தேதி

தை முதல் தேதி, எப்படியோ கோபுவின் வாழ்க்கையில் ஒரு விபரீத நாளாக அமைந்துவிட்டது. அவன் பிறந்ததே தை மாதம் முதல் தேதியன்று அதிகாலை. தனக்கு மனைவியாக வேண்டியிருந்த செல்லத்தை அவன் வேறொருவனுக்குப் பறிகொடுத்ததும் தை முதல் தேதி தான். அவன் அவளைச் சந்தித்த சோதனைத் தினமாகிய அன்றும் அதே தை மாதம் முதல் தேதி.

அதனால்தான் விதியில்கூட அவனுக்கு நம்பிக்கை ஏற்பட்டது. எப்பொழுதோ எவனுக்கோ வாழ்க்கைப்பட்டுக் கண்காணாமல் போயிருந்தவள் திடீரென்று அவன் கலியாணம் செய்துகொண்ட போது அவனுடைய மாமனார் குடும்பத்தில் ஒருத்தியாக எதற்காக இருக்க வேண்டும்?

கலியாணமே செய்து கொள்வதில்லை என்று பி.ஏ. தேறின பிறகுகூட மூன்று வருஷங்கள் கோபு சும்மா இருந்தான். அப்படித் திடமனத்துடன் இருந்தவன் தாயாருடைய தீராத தொந்தரவின் பேரில் பெண் பார்த்த பொழுது அந்த வீட்டில்தான் அவள் இருந்தாள். அது அவனுக்குத் தெரியாது என்பதன்று – தெரியும். சொல்லப் போனால் கலியாணி, வயது வந்த அழகிய பெண், அங்கிருப்பதாகச் செல்லந்தான் தன் தாயார் மூலம் அவனுக்குத் தகவல் சொல்லி அனுப்பினாள்.

செல்லம் கோபுவினுடைய அத்தையின் பெண் வயிற்றுப் பேத்தி. அவளுடைய கலியாண வயது வரையிலும் அவளை அவனுக்குக் கொடுப்பதாகத் தீர்மானம் செய்திருந்தார்கள். ஆனால் அப்பொழுது திடீரென்று கோபுவின் தகப்பனார், பி.ஏ. தேறின பிறகுதான் தம் பிள்ளைக்குக் கலியாணம் செய்யப் போவதாகச் சொல்லிவிட்டார். பெண்ணுக்கு வயதாகிவிட்டபடியால் அவளுடைய பெற்றோர்கள் வேறிடத்தில் வரன் பார்த்தார்கள்.

*கலைமகள், ஜனவரி 1940.*

அவளுக்கு கலியாணம் சென்னையில்தான் நடந்தது. கோபுக்கு அந்த வருஷம் எஸ்.எஸ்.எல்.ஸி தேறியிருந்தது. விதியின் மற்றொரு சிறு வேடிக்கைகூட அப்போது நடந்தது. அது கோபுவின் மனத்திலிருந்து ஒரு நாளும் மறையாது. பிள்ளைவீட்டார் வந்து இறங்கின பொழுது பெண்வீட்டில் ஆண் பிள்ளைகள் எல்லோரும் கடைத் தெருவிற்குச் சாமான்கள் ஜவுளிகள் வாங்கப் போயிருந்தார்கள். கோபுதான் அந்தச் சந்தர்ப்பத்தில் வீட்டுக்காரருக்குப் பிரதிநிதியாக இருந்து சம்பந்திகளை வரவேற்று மாப்பிள்ளைக்குப் பானகம் கொடுத்தான்!

இருவருக்கும் கலியாணம் ஆகும் என்ற பேச்சு இருந்ததனால் செல்லமும் கோபுவும் அப்பொழுது ஒருவருடன் ஒருவர் பேசுவ தில்லை. அது நின்று போன மறு வருஷம் அவளுக்குக் கலியாணம். பெரியோர்கள் பேச்சு நின்றவுடனேயே, சிறியோர் இருவரும் பேச ஆரம்பித்துவிட்டார்கள். அதுவும், தஞ்சாவூரில் ஏதோவொரு நெருங்கின பந்து வீட்டில் கலியாணம் நடந்த பொழுது ஐந்து நாளும் அவர்கள் ஒருவரை விட்டு ஒருவர் பிரியவில்லை. மனத்தில் உள்ளதை மறைத்து வைத்துக் கொண்டு என்ன என்னவோ பேசினார்கள். அதிலே ஓர் ஆறுதல் கொண்டார்கள். வெறும் சமீப்பியாத்தில் தேறுதல் கொண்டார்கள். அப்பொழுது அவளுக்கு வயது பதினான்கு.

செல்லம் அவ்வளவு நல்ல சிவப்பன்று. ஆனால் நல்ல உடழலகு பெற்றவள். முகமும் கலை நிறைந்தது. தலைமயிர் சுருள் சுருளாக நெற்றியில் தொங்கும். கண்கள்–அவற்றாலேயே அவள் பேசிவிடுவாள். செதுக்கிவிட்டது போன்ற வாய்; உதடுகள்.

★★★

ஏழு வருஷங்களுக்குப் பிறகு, கோபுவின் கலியாணத்தின் போது, அவள் வாழ்க்கையில் நான்கு வருஷங்கள் அடிபட்டுவிட்ட போதிலும் யௌவனத்தின் கட்டு மட்டும் குன்றாமல் இருந்தாள். ஆனால் அவளுடைய தெள்ளிய கண்களில் ஒரு தேக்கம் தென்பட ஆரம்பித்து விட்டது, கோபுவின் பார்வைக்கு.

மேலும் நான்கு வருஷங்கள் கழிந்தபிறகு, தன் மைத்துனன் கலியாணத்தின் போது, அவளைப் பார்த்துந்தான் கோபு பதற்றம் கொண்டுவிட்டான். 'பத்து வருஷங்களுக்கு முன்பு பதுமைபோல இருந்த செல்லம் இவள் தானா?' என்று சந்தேகிக்கும்படியாக அவ்வளவு மாறுதல் அடைந்திருந்தாள் அவள். காலம் குதறி எடுத்துவிட்ட தோல் பிம்பம் போல இருந்தாள். கன்னங்கள் ஒட்டி உடல் வெளுத்துக் கண்கள் குழிவடைந்து போயிருந்தாள்.

திருச்சிக்குப் போவதென்றாலே அவன் மனத்தில் ஒரு கலக்கம் ஏற்பட்டுவிடும். அதுவும் அங்கே போய் ஒரே வீட்டில் செல்லத்துடன்

தங்குவதென்பது அவனுக்கொரு பெருத்த கலவரம் ஆகிவிடும். சோகத்தை மனத்திலும் முகத்திலும் சுமந்துகொண்டு அவள் நடமாடும் காட்சியைப் பார்ப்பதற்கே அவனுக்கு கஷ்டமாக இருக்கும்.

ஆகையால் கோபு தன் மனைவி குழந்தைகளை முன்னதாகவே அங்கு அனுப்பிவிட்டு தான் மட்டும், கலியாணம் நாலு நாளும் கும்ப லோடு கும்பலாக இருந்துவிட்டு வந்துவிடலாம் என்று எண்ணினான். அப்படி முன் ஜாக்கிரதையுடன் செல்ல உத்தேசித்தவன் செல்லத்துடன் அந்த வீட்டில் ஓரிரவு பெரும் பகுதி தனியாக இருக்க வேண்டிய நிலைமை ஏற்படும் என்று எப்படி எதிர்ப்பார்ப்பான்! அந்த மாதிரி அப்படி ஓர் ஆபத்தான சந்தர்ப்பம் ஏற்படும் என்று செல்லம் கூட எதிர்பார்க்கவில்லை. அவ்வளவு யதேச்சையாயும் இயற்கையாயும் அது வாய்த்தது.

கோபுவின் மாமனார் அவனையும் கட்டாயமாக ரஜா எடுத்துக் கொண்டு பத்து நாள் முன்னதாக வரும்படி தந்தி கொடுத்துவிட்டார். மங்கிலியப் பெண்டுகள் முதலியன நடக்க வேண்டுமென்றும், பொங்கலுக்கே வந்துவிட வேண்டுமென்றும் விரிவாகக் கடிதம் எழுதி விட்டார்.

அன்று தை மாதம் முதல் தேதி. இரண்டு நாளாகக் கோபுவுக்குக் கொஞ்சம் உடம்பு அசௌகரியம். அவன் மனைவி பிறந்தகம் வந்த குதூகலத்தில் இருந்தாள். அன்றிரவு குழந்தைகளுக்குச் செல்லத்தைக் காவல் வைத்துவிட்டு எல்லோரும் சினிமாவுக்குச் சென்றார்கள் என்றால் அதற்காக யாரைச் சொல்லுவது? கோபு தன் மனைவியைக் கொஞ்சம் கோபித்துக் கொண்டு கூடப் பார்த்தான்.

'என்ன வேடிக்கை வேண்டியிருக்கிறது. நான் படுத்துக் கொண்டி ருக்கும்போது?' என்றான்.

'நான் என்ன பண்ணணும்? கஞ்சி, வெந்நீர்–சித்தி இருக்கா, தரா!'

என்று சொல்லி விட்டாள் அவள்.

அவர்கள் தனியாக இருக்க எற்பட்ட மறுநிமிஷம் கோபு உள்ளத்தைத் திறந்து விட்டான்.

'என்ன சோதனை இது? செல்லம்.'

அவர்களுடைய வாழ்க்கையிலேயே முதன்முதலாக அப்பொழுது தான் கோபு இந்த மாதிரி பேசினது. ஆனால் அந்தப் பேச்சு அவனுக்கோ செல்லத்துக்கோ ஆச்சரியத்தை அளிக்கவில்லை. அந்த வகையான வார்த்தை வாயில் வராத தோஷந்தானே ஒழிய அவர்களுடைய உள்ளங்கள் அறியாதது புதிதாக அதில் என்ன இருந்தது?

செல்லம் ஒரு பதிலும் சொல்லாமல் தன் கை காரியத்தை முடித்து விட்டு வந்து அவன் பக்கத்தில் உட்கார்ந்தாள்.

'வெந்நீர் வேண்டுமா?'

'வேண்டாம், செல்லம்!'

'உடம்பு இன்று கொஞ்சம் தேவலையா?'

'தேவலை!'

வேறென்ன பேசுவது? எதை எதையோ பேசலாமென்று வாயெடுத்தாள் செல்லம். எல்லாம் உபயோகமற்றதாகப் பட்டது அவளுக்கு. பேசாமலிருப்பதும் அவர்களுடைய சோதனையை ஒவ்வொரு நிமிஷமும் கடினமாக்கிக் கொண்டிருந்தது.

ஒரு குழந்தை விழித்துக்கொண்டு அழுதது. அதற்குப் பால் புகட்டித் தூங்கப் பண்ணுவதில் கொஞ்ச நேரம் கழிந்தது. செல்லம் தானும் போய்க் கொஞ்சம் தண்ணீர் குடித்துவிட்டு வந்து உட்கார்ந்தாள்.

'பெண்ணுக்குப் பாட்டு வருமா?' என்று கோபு என்னவோ ஆரம்பித்தான்.

'தெரியாதாம்; அதனால் என்ன மோசம்? எனக்குத் தெரிஞ்சு என்ன ஆச்சு?' என்றாள் செல்லம்.

அவ்வளவுதான். இருவருடைய ஞாபகங்களும் ஏக காலத்தில் பழைய நாட்களுக்குச் சென்றன. இருவரும் சற்று நேரம் பேச்சற்று உட்கார்ந்திருந்தார்கள்.

இரவு பத்து மணி இருக்கும். தெருவில், வயல்களிலிருந்து மூட்டைகளை ஏற்றிக்கொண்டு வந்த நெல் வண்டிகள் நொடிகளில் சத்தம் செய்துகொண்டு போவது இடைவிடாமல் கேட்டுக்கொண்டிருந்தது.

'எப்படி யெல்லாம் வாழ்க்கைப் புரண்டுவிட்டது செல்லம்?' என்றான் கோபு மறுபடியும்.

'என்ன செய்யலாம் கோபு? கொடுத்துவைத்தபடிதானே நடக்கும்!'

'அவ்வளவு வருஷங்களில் அன்றுதான் செல்லம் அவ்வளவு வார்த்தைகள் சொல்லித் தன் உள்ளச் சுமையைக் கொஞ்சம் குறைத்துக் கொண்டாள். சொன்னவுடனேயே அதுகூட ஜாஸ்தியோ, பிசகோ என்று திடுக்கிட்டுப் போனாள். சொன்னதை வாபஸ் பெற முயலுவது போலச் சட்டென்று, 'மணி என்ன இருக்கும்?' என்று கேட்டாள்.

'என்ன, பத்து இருக்கும்!'

'எவ்வளவு நேரம் போயிருக்கிறார்கள்!'

'போய் ஒரு மணி நேரந்தானே ஆகிறது? ஒரு மணிக்குத்தான் வருவார்கள். ஏன் செல்லம்?'

'ஒன்றுமில்லை.... பயமாக இருக்கிறது!' என்று செல்லம் திடீரென்று சொன்னாள்.

கோபு, 'என்ன பயம்' என்று கேட்கவில்லை. அவனுக்குத் தெரியாவிட்டாலல்லவா கேட்கப் போகிறான்?

'நீ ஏன் இவ்வளவு நாட்களுக்கு முன்பே இங்கு வந்தாய்?'

'நானாக வரவில்லை, செல்லம். கும்பலோடு கும்பலாய் வந்து

விட்டு போய்விடலாம் என்று இருந்தேன்; ஏன்...'

'தெரியும் தந்தி அடித்தது. அவர்கள் என்ன கண்டார்கள்?'

அப்படிச் செல்லம் சொன்னதும், கோபு படுக்கையில் திடீரென்று எழுந்து உட்கார்ந்து கொண்டான்.

'அத்தான்!' என்று செல்லம் எச்சரிக்கை செய்தாள். ஆனால் அவளது உள்ளம் பொங்கிக்கொண்டிருந்தது.

கோபு கண்மூடித்தனமாக எட்டி அவள் கையைப் பிடிக்கக் குனிந்தான்.

'நீ என்னைத் தொட்டால்–பிறகு, உன் முகத்தைப் பார்க்க என்னால் முடியாதே!' என்று செல்லம் வெகு உணர்ச்சியுடன் கூறினாள்.

'வேண்டாம்!' என்று சொல்லிக் கொண்டு கோபு நெருங்கினான்.

'அத்தான், உன்னை – எப்பொழுதுதாவது பார்க்காமல் – நான் – நான் – இருக்க முடியாது – தொடாதே! அதற்காகத்தான் – இந்த வீட்டில் பெண் தேடிக் கொடுத்தேன் – தொடாதே' என்று செல்லம் கத்தியே விட்டாள்.

கோபு அப்படியே அசைவற்றுப் போனான். ஒரு நடுக்கம்; பிறகு சிறிது சிறிதாக அமைதி உண்டாயிற்று. வெகுநேரம் கழித்து அவனுக்கு வாயில் வார்த்தை வந்தது?

'செல்லம், செல்லம், நீ தொடக் கூடாதவள்தான்!' என்றான்

அந்தத் தெளிவில் ஒருவரை ஒருவர் சாவதானமாகப் பார்த்துத் திருப்தி அடைந்தார்கள்.